2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 20—3—75 வியாழன் மலர்: 41

## தமிழகம் முழுவதும் டாக்டர்கள் ஸ்டிரைக்

மதுரை, மார்ச், 18—

தமிழகம் முழுவதும் உள்ள 2 ஆயிரத்துக்கு மேற்பட்ட இளம் டாக்டர்கள் கடந்த (செவ்வாய்) அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்,

வேலையில்லாத டாக்டர்கள் அனைவருக்கும் உடனடி வேலைவாய்ப்புக்கோரி இந்த வேலை நிறுத்தம் நடந்தது. இவர்களுக்கு ஆதரவு தெரிவித்து மாநிலம் முழுவதும் மருத்துவக் கல்லூரி மாணவர்கள் சுமார் 8 ஆயிரம் பேரும் வேலைநிறுத்தம் செய்தனர். (விபரம் பின்னர்)

## காங்கிரஸ் குண்டர்களின் மோதல்

கல்கத்தா. மார்ச், 17—

கல்கத்தா நகரில் காங்கிரசுக்கட்சியைச் சேர்ந்த மாணவர்கள் கோஷ்டி சண்டையால் மோதினர் மோதலில் வெடிகுண்டுகள் துப்பாக்கிகள் முதலியன தாராளமாக பயோகப்படுத்தப்பட்டன. இம்மோதல் ரவீந்திரா பாரதி பல்கலைகழக பகுதிக்குள் நடைபெற்றது. இம்மோதலில் பலர் படுகாயமடைந்தனர், இம்மூர்க்கத்தனமான மோதல் போலீஸ் வரவழைக்கப்பட்டபின்பே தவிர்க்கப்பட்டது ஆனல் யாரும் கைது செய்யப்பட வில்லை.

## கோட்டையில் வந்து பரிசீலிக்காமல் கூட்டத்தில் பேசுவது முறையா?

# மத்திய அரசு-தமிழக அரசு முரண் முற்றுகிறது

## சி. சுப்ரமண்யத்தின் திமிர்ப்பேச்சின் விளைவு

சென்னை, மார்ச் 19 —

**மத்திய அரசு தலைவர்கள் எஜமானர்களைப் போலவும், மாநில அரசு தலைவர்கள், அதிலும் குறிப்பாக, மாற்றுக் கட்சி ஆளும் மாநில அரசு தலைவர்கள் அடிமைகள் போலவும் நடத்தப்பட்டு வருகிறார்கள்.**

**மூன்று நாட்களுக்கு முன்னே மத்திய நிதியமைச்சர் சி சுப்ரமண்யம் வறட்சி நிவாரணம் பற்றி பேசிய பேச்சுகளும், நடந்து கொண்ட முறைகளும், மத்திய அரசுக்கும் மாநில அரசுக்குமிடையே தகராறுகளை விசுவரூபம் எடுக்கச் செய்து விட்டன.**

மாநில அரசின் மீது ஏதாவது புகார் இருப்பதாகக் கருதினல் மத்திய அரசின் முக்கிய மந்திரி என்ற முறையில் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லி பரிகாரம் காண்பதற்குப் பதிலாக, தெருப் பொதுக் கூட்டங்களில் பேசித் திரிவதால், மத்திய—மாநில உறவுகளை மேலும் மேலும் கசப்படையச் செய்கிறது.

### சி சுப்ரமண்யம் பேச்சு

இம்மாதம் 16-ம் தேதியன்று, சென்னையில நடந்த பொதுக் கூட்டமொன்றில் மத்திய நிதி மந்திரி சி சுப்ரமண்யம் பேசினர்

அவர் பேசுகையில், "தமிழ் நாட்டுக்கு மத்திய அரசு வழங்கிய வறட்சி நிதி எவ்வாறு செலவு செய்யப்பட்டுள்ளது என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு மாத்திரமே, மேலும் நிதி உதவி செய்யப்படும்"—என்று பேசியிருக்கிறார்.

### கருணநிதி பதில்

மறுநாள் சென்னை புதுப்பேட்டையில் நடந்த திமுக பொதுக் கூட்டத்தில் பேசிய முதலமைச்சர் மு கருணநிதி, சி சுப்ரமண்யத்தின் மேற்கண்ட பேச்சுக்கு பதில் அளித்தார். முதலமைச்சர் பேசுகையில், "மத்திய நிதியமைச்சர் சுப்ரமண்யத்தின் பேச்சு, அவரது அரசியல் வெறுப்பையே காட்டுகிறது. டில்லியிலுள்ள ஆட்சியாளர்கள் மாநில அரசுகளை அடிமைகளைப் போலவே கருதுகிறார்கள் என்பதற்கு சி சுப்ரமண்யத்தின் பேச்சு மற்றுமோர் சான்றாகும்.

மத்திய அரசில் உள்ளவர்கள் ஏதோ ஏசுநாதர், கௌதம புத்தர் போன்ற உத்தமபுத்திரர்கள் போலவும், மாநில அரசிலுள்ளவர்கள் ஊதாரிகள் போலவும் சுப்ரமண்யம் பேசுகிறார்.

தமிழ் நாட்டில் வறட்சி நிவாரண வேலைகளுக்காக நான் மத்திய அரசிடம் நிதி உதவி கேட்டிருந்தேன். மத்திய அரசோ ரூ $7\frac{1}{2}$ கோடி தருவதாக வாக்களித்திருந்தது.

ஆனல் இதுவரை ரூ $6\frac{1}{4}$ கோடிதான் கிடைத்துள்ளது. இந்த அளவுபணம் கூட மானியமாகக் கொடுக்க வில்லை. ஆனல் தமிழ் நாட்டு ஐந்தாண்டுத் திட்டத்துக்காக ஒதுக்கப்பட்டுள்ள பணத்தில் இது கழித்துக் கொள்ளப்படுமாம்.

மத்திய அரசின் போக்கு இதுவாக இருக்குமேயானல், மாநில அரசு இனிமேல வறட்சி நிவாரண நிதிக்கு மத்திய அரசிடம் போகாது"—என்றுபேசினர்.

### சட்டசபையில்

சி. சுப்ரமண்யம் பேச்சுக்கு, கருணநிதி பொதுக் கூட்டத்தில் பதிலளித்ததானது, வறட்சியால் பாதிக்கப்பட்டிருக்கும் மக்களுக்கு கவலையளிப்பதாக இருக்கிறது. என்று 17-ம் தேதிய சட்டசபைக் கூட்டத்தில் அதிமுக தலைவர் கோவை செழியன் பிரச்னையைக் கிளப்பினர்.

அடுத்து அதிமுக உறுப்பினர் எச் வி ஹண்டேயும், "முதலமைச்சர் பேசிய பேச்சு நிதிக் கொள்கை பற்றியதாக இருப்பதால, சட்டப் பேரவை நடந்து கொண்டிருக்கும் போது, சபையில் அறிவிக்காமல் வெளியில் அறிவிப்பது சரியா?"—என்று ஒரு ஒழுங்குப் பிரச்னையை எழுப்பினர்.

### அவர் தெருவிலே பேசினர் நானும் தெருவிலே பேசினேன்

அதற்கு முதலமைச்சர் கருணநிதி பதிலளிக்கையில், 'தெருக் கூட்டமொன்றில சுப்ரமண்யம் பேசியதற்கு ஒரு தெருக் கூட்டத்தில பதில் அளித்ததுதான் பொருத்தமாகும் பார்லிமெண்டில் சுப்ரமண்யம் அறிவித்திருந்தால் அதற்கு, அசெம்பிளியில் பதில் கொடுத்திருப்பேன்"—என்றார்.

வறட்சி நிவாரணத்துக்கு மத்திய அரசு வழங்கிய பணம் எப்படிச் செலவழிக்கப்படுகிறதென அறிந்து கொள்ள விரும்பினல்—என்ன மாதிரி செலவழிக்கப்பட வேண்டுமென்று யோசனை கூறவும் சுப்ரமண்யம் விரும்பினல்—ஒரு பொறுப்பு வாய்ந்த மத்திய மந்திரி என்ற முறையில் முதலமைச்சருடன் கலந்திருக்க வேண்டும் அல்லது தலைமை செயலகத்துக்கு வந்து முதலமைச்சருடனும் சம்பந்தப்பட்ட உயர் அதிகாரிகளுடனும்பேசியிருக்க வேண்டும். இப்படித்தான் இதற்கு முன்னர் சுப்ரமண்யம் ஆலோசனை நடத்தி இருக்கிறார். ஏதோ மத்திய அரசாங்க மந்திரிகள் ஒழுக்கத்தில் ஒப்புயர்வற்ற உத்தம புத்திரர்கள் போலவும், மாநிலத்திலுள்ளவர்கள் ஊதாரிகள் போலவும் பேசியிருக்கிறார். இது திமுக அரசை களங்கப்படுத்த வேண்டுமென்று தேர்தல் கண்ணோட்டத்தோடு பேசிய பேச்சாகும்.

கணக்கு கொடுக்க மறுக்கவோ, அதை நான் மறைக்கவோ இல்லை. ஆனல் அதே சமயத்தில் வறட்சி நிவாரண வேலைகளுக்கு மாநில அரசிடம் கணக்கு கேட்க மத்திய அரசுக்கு அதிகாரமில்லை'—என்று கூறினர்.

"இருந்த போதிலும், மாநில அரசை மாசுபடுத்தும் எண்ணத்துடன் சுப்பிரமண்யம் கூறும் குற்றச் சாட்டுகளிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள கணக்குகளை வெளியிட நான் தயாராக இருக்கிறேன்.

"இந்திய அரசின் ஆடிட்டர்ஜெனரல், அக்கௌண்டண்ட் ஜெனரல் ஆகியவர்களின் தணிக்கைக்கு மாநில அரசின் கணக்குகள் உட்பட்டதாகும் ஒழுங்கீனங்கள் ஏதாவது இருந்தால், அவர்களது கண்ணுக்கு தப்பமுடியாது"— என்றும் முதலமைச்சர் கூறினர்.

### சி. சுப்ரமண்யத்திடம் வறட்சி நிதி கேட்கமாட்டேன்

அவர் மேலும் பேசுகையில் 'நாங்கள் மத்திய அரசிடம் பிச்சை கேட்கவில்லை. நமது மாநிலத்திலிருந்து மத்திய அரசு வசூலித்திருப்பதில் தமிழ்நாட்டுக்கு உரிய் நியாயமான பங்கைத்தான் கேட்கிறோம்.

"ஆகவே, சி. சுப்பிரமண்யம் நிதி மந்திரியாக இருக்கும்வரை, வறட்சி நிவாரணத்திற்கு மத்திய அரசிடமிருந்து நான் நிதி உதவி கேட்க மாட்டேன்"—என்றார்.

இச்சமயத்தில் திருமதி அனந்தநாயகி "சுப்ரமண்யம் தமிழர் இல்லையா? அவருக்கு தமிழ் மக்கள் மீது அக்கறை இல்லையா?"—என்று கேட்டார்.

அதற்கு முதலமைச்சர் 'மத்திய அரசிலுள்ள மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த ஒய்பிசவாண், மகாராஷ்டிர வறட்சிநிதிக்கு ரூ 50 கோடியை மத்தியிலிருந்து பெற்றார். ஆனல் தமிழ்நாட்டின் கதி வேறு விதமாக இருக்கிறது"—என்றார்.

நிதிமந்திரி சுப்ரமண்யத்தின் பேச்சு மார்ச் 17-ல நடந்த ராஜ்ய சபைக்கூட்டத்தில் கண்டிக்கப்பட்டது.

ராஜ்ய சபையில் திமுக உறுப்பினர் சமலாநாதன், "வறட்சி நிதி வழங்குவதில் தமிழ் நாட்டுக்கு பாரபட்சம் காட்டுவது ஏன்?"—என்று கேட்டதோடு, சி சுப்ரமண்யத்தின் சென்னை பேச்சையும் கண்டித்தார். மேலும், இப்படிப்பட்ட பேச்சுகளைப் பேசுவதற்கு இவருக்கு அதிகாரம் அளித்தது யார்?"—என்றும் கேட்டார்.

முஸ்லீம் லீக் உறுப்பினர் காஜா மொய்தீனும் "மாநில அரசுகளை மத்திய அரசு அடிமைகளாகவே நடத்துகிறது என்பதற்கு சி சுப்ரமண்யம் பேச்சு ஒரு சான்றாகும்"—என்று கண்டித்தார்]

சென்னைக் கூட்டத்தில கருணநிதி பேசுகையில், இப்படிப்பட்ட பொறுப்பற்ற பேச்சுகளை பேசக்கூடாது என்று சி சுப்ரமண்யத்தின் வாயைத்தைத்துவைக்கும்படி பிரதமர் இந்திராவைக் கேட்டுக் கொண்டார்.

---

## காஷ்மீர் ஒப்பந்தம்:

# மத்திய கமிட்டி தீர்மானம்

இம்மாதம் 13முதல் 17வரை கல்கத்தாவில் கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி, காஷ்மீர் ஒப்பந்தம் பற்றி கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது:—

ஷேக் அப்துல்லாவுக்கும், இந்திய அரசுக்குமிடையே ஏற்பட்டுள்ள ஒப்பந்தம் அரசியல் சட்டத்தின் 370வது பிரிவின் நிரந்தர நீடிப்புக்கு வழி செய்கிறது. அவ்வொப்பந்தத்தில் காஷ்மீர் மாநிலத்தின் விசேஷ அந்தஸ்து அங்கீகரிக்கப்பட்டுள்ளது. எனவே அவ்வொப்பந்தத்தை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் மத்திய கமிட்டி வரவேற்கிறது.

அவ்வொப்பந்தம் வரம்புக்குட்பட்டதாக இருந்தாலும், காஷ்மீர் மக்களுக்கும், ஏனைய இந்திய பகுதி மக்களுக்குமிடையே வளர்ந்துள்ள பிளவை நீக்குவதற்கு காஷ்மீர் ஒப்பந்தம் உதவும் என மத்திய கமிட்டி நம்புகிறது.

இந்திய அரசும், காஷ்மீர் மக்கள் தலைவர்களும், மக்களின் விருப்பங்களுக்கு மதிப்பளித்து, காஷ்மீர் பிரச்னை, காஷ்மீர் மக்கள் தலைவர்களுக்கும் இந்திய அரசுக்குமிடையே தீர்க்கப்பட வேண்டும் என்பதை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) எப்போதும் கூறி வந்திருக்கிறது.

அரசியல் சட்டத்தின் 370வது பிரிவை முறிக்குமாறு ஜனசங்கம் கோரிவந்ததை எப்போதும் எதிர்த்தே வந்திருக்கிறது. காஷ்மீரில் மீர்வெய்ஜ என்பவரின் தலைமையில உள்ள பாகிஸ்தான் அவாமி நடவடிக்கை கமிட்டிக்கான ஆதரவுசக்திகள் போன்றபிற்போக்குசக்திகள காஷ்மீரில் சீர்குலைவு வேலைகளை செய்து வந்தன. இது போன்ற பிற்போக்கு சக்திகளுக்குத்தான ஜனசங்கம் எடுத்துள்ள நிலை உதவிகரமாக இருந்தது.

எனினும் ஷேக் அப்துல்லாவோடு மத்திய அரசு செய்து கொண்ட ஒப்பந்தம் அரசியல் சட்டத்தின் 370 வது பிரிவால் உத்திரவாதம் செய்யப்பட்ட சுயாட்சியை வழங்காது என்பதையும் மத்திய கமிட்டி கவனிக்கிறது. காஷ்மீர் அரசின் ஒப்புதல் இல்லாமலேயே அம்மாநிலத்தில் மத்திய அரசு ஜனதிபதி ஆட்சியை ஏற்படுத்தவும் அம்மாநிலத் தலைமையை தேர்ந்தெடுக்கும் உரிமையை மறுக்கவும் அவ்வொப்பந்தம் மத்திய அரசுக்கு அதிகாரம் அளித்துள்ளது.

எனவே முழு சுயாட்சிக்கான மக்களின் விருப்பத்தை திருப்தியளிக்காமல பிரச்சினைக்கு ஒருநிரந்தர தீர்வு காண முடியாது என்று மத்திய கமிட்டி எச்சரிக்கிறது.

பிற்போக்கு சக்திகளை எதிர்த்து போராடுமாறும் ஏனைய இந்திய ஜனநாயக சக்திகளோடு ஒன்றுபடுமாறும் காஷ்மீர் மக்களை மத்திய கமிட்டி வேண்டுகிறது. காஷ்மீர் மக்கள் தங்களுடைய ஒரு சிறப்பான சமூக—பொருளாதார வாழ்க்கைக்கான போராட்டத்தை தொடர அவர்களுக்கு உரிமை உண்டு.

---

## சர்வே இலாகாவில்

# 500 ஊழியர்கள் வேலைநீக்கம்

## நடவடிக்கைக் குழு கண்டனம்

மதுரை. மார்ச் 17—

சர்வேஇலாகாவில் பணிபுரியும் 500க்கு மேற்பட்ட சங்கிலியாளர்களை (செயின் மேன) எவ்விதமுன்னறிவிப்புமின்றி—மாற்று வேலைக்கு எந்தவொரு ஏற்பாடும் செய்யாமல் தமிழகஅரசு திடீரென வேலைநீக்கம் செய்துள்ளதற்கு திரு ஆர் ஏ கூடலிங்கம் தலைமையிலான என் ஜி ஓசங்க மாநில நடவடிக்கைக் குழு கடுமையாக எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

இது சம்பந்தமாக நடவடிக்கைக் குழு கன்வீனர் திரு. எப் எம் குத்புதீன் கூறுகையில இது சம்பந்தமாக தங்களது ஆட்சேபனையை அரசுக்குத் தெரியப்படுத்தியிருப்பதாக கூறினர்.

கொடைக்கானல் மற்றும் பல இடங்களில் சர்வே வேலைகள் நடப்பதாகவும், அங்கு வேலை பார்க்க இவர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்றும் கோரி நடவடிக்கைக் குழு சார்பில் சென்னையிலும், மதுரையிலும் உள்ள சர்வே இலாகா அதிகாரிகளுக்கு தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன என்றும அவர் கூறினர்.

---

## போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரின் காட்டு தர்பார்

### ஊருக்கே அவர் ராஜாவாம்

சமுதுமலை, மார்ச் 17—

இங்குள்ள மகாலட்சுமி ரைஸ் மில் அதிபர்கொடுத்த புகாரின் பேரில், அந்த ரைஸ் மில்லில் வேலை பார்த்து வரும் சி ஐ டி யூ சங்க ஊழியர்கள் இருவரைக்கைது செய்து லாக்- அப்பில 4 நாட்களாக வைத்து அடித்து இம்சித்தாராம் இங்குள்ள போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்.

இது சம்பந்தமாக ஸ்தல மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களிடம் அத்தொழிலாளர்களது பெற்றோர் முறையிட்டுவே தோழர்கள் ஆர் முத்தையா, எம் செல்லையா இருவரும் சென்று 4 நாட்களாக சித்திரவதை செய்யப்பட்டு வரும் தொழிலாளிகளை சங்கத்து பேரிலாவது ஜாமினில விடக்கோரிய பொழுது, "நான் இந்த ஊருக்கு ராஜா", என் இஷ்டப்படி எதையும் செய்வேன் இதில் நீங்கள் தலையிட வேண்டாம் போய்விடலாம்' என்று ஆணவத்துடன் சொன்னராம்.

போலீஸ் சப் - இன்ஸ்பெக்டரின் இந்த அக்கிரம நடவடிக்கை ஸ்தல மக்களிடம ஆத்திரத்தைக் கிளப்பியுள்ளது.

### வேலையை விட்டு நீங்க நீண்டநாள் திட்டம்

சிஐடியூ சங்கத்தில் உறுப்பினர்களாக உள்ளார்கள் என்பதற்காகவே, 10 ஆண்டுகளாக அந்த ரைஸ் மில்லில் வேலை பார்த்துவரும் முருகன், அய்யப்பன் ஆகிய இருவரையும வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டும் என்று அதன் அதிபர் நீண்டநாட்களாகவே திட்டமிட்டு வந்தாராம.

மில்லில் ஒரு கைக் கெடிகாரம் திருடு போய்விட்டதாகக் கூறிய, முதலாளி கருப்பணக்கோனர் அந்த கடிகாரத்தை இவ்விருவரும்தான் களவாடியிருக்க வேண்டும் என்று முடிவு செய்து அவ்விரு தொழிலாளர்களையும் காட்டுமிராண்டித்தனமாக அடித்து உதைத்து அதன்பின்பு காவல் நிலையத்தில ஒப்படைத்தாராம்.

### 96 மணி நேரம் லாக்-அப்பில்

24 மணி நேரத்துக்கு மேல் யாரையும் லாக-அப்பில் வைத்திருக்கக் கூடாது என்று விதி இருக்கும்போது 4 நாட்களாக—96 மணி நேரம் லாக்அப்பில வைத்து சித்தரவதை செய்தாராம் உதயசங்கர் என்ற போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்.

இவ்விருவரது பெற்றோர்களும், தமது மகன்களை சித்திரவதை செய்யாதீர்கள், கிரிமினல்களை விடுதலை செய்யுங்கள என்று முறையிட்ட போது, இவர்கள் தான கடிகாரத்தை எடுத்ததாக ஜோசியம சொல்லுகிறது ஆகவே திருப்பி வரும் போது 'வாட்சி'யோடு வாங்க; இல்லாவிட்டால் இந்தப் பக்கம் வராதீர்கள் என்று சொல்லி விரட்டி விட்டார்களாம்.

---

## தெ. வியட்னமில் கூலிப்படை ஓடுகிறது

சைகோன், மார்ச். 17—

தென் வியட்னமின் மத்திய மேட்டுப் பகுதியின தென்பாகம் முழுவதும் தென் வியட்னம் விடுதலைப்படையினரால பொம்மை அரசின் கூலிப்படையிடமிருந்து கைப்பற்றப்பட்டது. இதில் ஒருமாவட்டத்தின் தலைநகரான புயோக் அன் என்னும் நகரமும, பேனமிதுயோட் என்ற விமான நிலையமுள்ள நகரமும அடங்கும்.

பிடிபட்ட புயோக் ஆன் நகர் பொம்மை அரசின்தலைநகரான சைகோனிலிருந்து வடக்கே 160வது மைலில் உள்ளது. பிடிபட்ட விமான நிலைய நகர் பேனமிதுயோட் சைகோனுக்குமேற்கே சுமார் 20 மைலுக்குள் இருக்கிறது கடந்த எட்டு நாட்கள் சண்டையில், விடுதலைப்படைகளின கையில் விழுந்த7வது மாவட்டத் தலைநகராகும. புயோக் அன் ,விடுதலைப்படைகள் மீதுதாக்குதல தொடுக்க கூலிப்படைகளுக்கு பயன்பட்டு வந்தது ஆங்கர்.

தென்வியட்னமின் மத்திய மேட்டுப் பகுதியில தெற்கு பாகத்தை இழந்த பொம்மை அரசின் படைகள் பிலெங்கு என்ற விமான தளத்தை விட்டு வேறு இடங்களுக்கு மாற்றுகிறார்கள். மத்திய பகுதியின் மீதி இடத்தையேனும் காப்பாற்றவேண்டும் என்பதற்காக இடத்தை மாற்றுமாறு ராணுவதலைமை உத்திரவிட்டுள்ளதாம்.

---

## கோவை வடக்கு தாலுகா கமிட்டி:

## கட்சி-தீக்கதிர் வளர்ச்சிக்கு ரூ.1450 நிதியளிப்பு

கோவை, மார்ச் 18—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கோவைத் தாலுகா (வடக்கு) கமிட்டி சார்பில் கட்சி - தீக்கதிர் வளர்ச்சி நிதிக்காக ரூ. 1450 வழங்கப்பட்டது.

கடந்த 12-ந் தேதி உடையாம்பாளையத்தில் நடந்த நிதியளிப்புக் கூட்டத்தில் கட்சியின் மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் கே, ரமணியிடம் ரூ. 1415 வழங்கப்பட்டது,

16-ந் தேதியன்று துடியலூரில் நடந்த கூட்டத்தில் ரூ. 35 நிதியளிக்கப்பட்டது.

உடையாம்பாளையம் கூட்டத்துக்கு கட்சியின் தாலுகாக்கமிட்டி உறுப்பினர் தோழர் கே சிவசாமி தலைமை வகித்தார். இக்கூட்டத்தில் மாவட்டச்செயலாளர் ஆர் வெங்கிடு, தாலுகாச் செயலாளர் பி நடராஜன் சி. ஐ. டி, யூ. செயலாளர் வி. கே. வெள்ளிங்கிரி, ஏ. பழனிச்சாமி (வாலிபர் முன்னணி] ஆகியோரும் பேசினர்.

# தீக்கதிர்

## பாகிஸ்தானுக்கு அமெரிக்க ஆயுத உதவியின் அபாயம்

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா யுத்த தளவாடங்கள் அளிப்பதின் தீய விளைவுகளைப்பற்றி ஏற்கெனவே "தீக்கதிர்" செய்திகளைத் தாங்கி வந்துள்ளது. அண்மையில் கல்கத்தாவில் கூடிய இந்திய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி இது குறித்து ஒருவிசேஷத்தீர்மானமொன்றை நிறைவேற்றியுள்ளது.

"தென்கு ஆசிய பிரதேசத்தில் களங்களை ஏற்படுத்திக்கொள்ள, அமெரிக்க ஏகாதிபத்தியம் வகுத்துள்ள 'மாபெரும் சதிக்கிட்டத்தின்' ஒரு பாகமாகவே பாகிஸ்தானுக்கு ஆயுதங்கள் அளிக்கப்படும் முடிவை நாம் கருத வேண்டும் என்றும் அத்தீர்மானம் கூறுகிறது.

தென்கிழக்கு ஆசியாவில் கம்போடியாவின்தலைநகரான நாம்பென்னை விடுதலைப்படைகள் சுற்றிவளைத்து விட்டன. அமெரிக்க கைப்பாவையாக இருந்த ஜெனரல் லான்நாலுக்கு சரணாகதியடைவதைத் தவிர வேறு வழியில்லை சீக்கிரத்திலேயே கம்போடிய நாடு முழுவதும் விடுவிக்கப்படும் நாள் நெருங்கி வந்துகொண்டிருக்கிறது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் செல்வாக்கு அங்கிருந்து விரட்டியடிக்கப்படுகிறது.

இதேசமயத்தில்— தென்கிழக்கு ஆசியாவின் மற்றொரு பிரதேசமான தெற்கு வியட்நாமில் விடுதலைப் படைகள் ஒவ்வொரு முக்கிய நகரமாகக் கைப்பற்றி தலைநகர் சைகோனை நோக்கி வந்து கொண்டிருக்கின்றன. ஏற்கனவே ஐந்தில் நான்கு பங்குக்குமேல் நாட்டின் பிரதேசம் விடுதலைப்படைகள் கைவசமுள்ளது. செய்கோனிலுள்ள அமெரிக்காவின் பொம்மை ஆட்சி கவிழும். அமெரிக்கத் தலையீடும் முடிவுறும்.

ஏற்கனவே இவ்விரு நாடுகளுக்குமிடையே உள்ள லாவோஸ் நாட்டில் உள்நாட்டுப் போர் நிறுத்தப்பட்டு, புதிய அரசாங்கம் அமைக்கப்பட்டு அமெரிக்க நுழைவு அறவே அகற்றப்பட்டு விட்டது.

தென்கிழக்கு ஆசியாவில் இவ்வாறு 10 வருடங்களுக்கு மேல் மூன்று கோடான கோடி ரூபாய்களை செலவழித்து லட்சக்கணக்கில் மக்களைக் கொன்று குவித்தும் குண்டுமாரி பொழிந்தும், இன்று அமெரிக்காவுக்கு கால் வைக்கக்கூட இடமில்லாத நிலை ஏற்பட்டு வருகிறது எனவேதான்—தென்கிழக்கு ஆசியாவை விட்டு மேற்கு ஆசியாவில் தனது சதிகளைத் திருப்பியிருக்கிறது. அமெரிக்க ஏகாதிபத்தியம். பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளை இந்தப் போர்த் திட்டத்தின் ஒரு பகுதியே.

அமெரிக்காவிலிருந்து வெளிவரும் "டைம்" என்ற பிரபல வாரப் பத்திரிகை ஒரு முக்கியமான தகவலை சமீபத்தில் வெளியிட்டிருக்கிறது. யுத்த தளவாட வியாபாரத்தில் அமெரிக்காதான எல்லா ஏகாதிபத்திய நாடுகளையும், மிஞ்சிவிட்டதாம்;1950லிருந்து இதுவரை அமெரிக்கா வெளிநாடுகளுக்கு விற்றிருக்கும் ஆயுதங்களின் மதிப்பு 86,000மில்லியன் டாலர்களாம.

அதாவது 64 ஆயிரத்து 500 கோடி ரூபாய்களை மக்களைக் கொன்று குவிக்கும் வியாபாரத்தில அமெரிக்க ஏகாதிபத்தியம கடந்த 25 வருடங்களுக்குள் ஈடுபடுத்தியிருக்கிறது என்று பொருள்.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் நமது சர்க்கார் மீது அமெரிக்காவின்நிர்ப்பந்தம் அதிகரிக்கும்.

மேற்கு ஆசியா, ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் நடக்கும் விடுதலை இயக்கங்களுக்கு ஆதரவு நல்கக் கூடாது என்று வற்புறுத்தப்படும். சோசலிஸ்ட் சீனத்துடன் நட்புறவு வேண்டாமென்று நிர்ப்பந்திக்கப்படும். பொருளாதாரத் துறையில் ஏகாதிபத்தியவாதிகளின் விருப்பப்படி நடந்து கொள்ளவேண்டுமென்று இந்திய சர்க்கார் நெருக்கப்படும்.

அமெரிக்காவிடம் நிதி உதவிக்கும் கடனுக்கும், உணவு தானியங்களுக்கும் கையேந்தி நிற்கும் இந்திய சர்க்கார் இந்த நிர்ப்பந்தத்திற்கு அடிபணியாதென்று கூறமுடியாது.

ஓரளவுக்கு அமெரிக்காவின் போக்குக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் முறையில சில சந்தர்ப்பங்களில் இந்திய சர்க்கார் பேசினாலும் மக்களின் ஒன்றுபட்ட கிளர்ச்சியும் நடவடிக்கைகளும்தான் இந்திய சர்க்காரை உறுதியாக அமெரிக்கா ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் பாதையில் செல்ல நிர்ப்பந்திக்க முடியும். இந்தியாவிலுள்ள ஜனநாயக சக்திகள் அனைத்தும் உஷாராயிருந்து கண்காணிக்கவேண்டிய விஷயம் இது.

---

## வறட்சி நிவாரணப் பணிகளை துரிதப்படுத்தும்படி மத்திய-மாநில ஆட்சியாளரை நிர்ப்பந்திக்க

# விவசாயிகள் - மாதர்கள் - தொழிலாளர்கள் பல்லாயிரம் பேர் பங்கேற்ற உண்ணுவிரதக் கிளர்ச்சி

மதுரை, மார்ச். 16—

தமிழகம் முழுவதும் கடந்த 14, 15. 16 தேதிகளில், முறையே பல்லாயிரக்கணக்கான விவசாயிகளும், மாதர்களும், தொழிலாளர்களும் அடையாள உண்ணுவிரதக கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர்.

கட்டாய ரேசனை அமுலாக்க கோரியும், வறட்சி நிவாரணப்பணிகளை துரிதமாக மேற்கொள்ளக் கோரியும், 500 குடும்பங்களுக்கு ஒரு கடை வீதம் திறந்து, உணவுப் பொருட்களையும் அத்தியாவசியப் பொருட்களையும சப்ளை செய்யக் கோரியும், வறட்சி நிவாரண வேலைகளில்ஈடுபடுத்தப்படும் தொழிலாளர்களுக்கு -ஆண் பெண் என்ற பாகுபாடின்றி- ரூ 5க்கு குறையாமல் கூலி தரக்கோரியும் தமிழக அரசை வற்புறுத்தியும்,

வறட்சி நிவாரண நடவடிக்கைகளை மேற்கொள்ள தமிழகத்துக்கு குறைந்த பட்சம் ரூ 25 கோடி ஒதுக்கும்படி மத்திய அரசை வலியுறுத்தியும்—இந்த கோரிக்கைகளுக்காக பொது மக்களின் ஆதரவைத்திரட்டவும்,

விவசாயிகள் சங்கம், ஜனநாயக மாதர்சங்கம், சிஐடியூ ஆகியவற்றின் சார்பில் உண்ணுவிரதக் கிளர்ச்சி தமிழகம் முழுவதும் நகரங்களிலும், பட்டிதொட்டிகளிலும நடந்தன. ஒவ்வொரு நாளும் உண்ணுவிரதம்காலையில் துவங்கி மாலையில் முடிக்கப்பட்டது.

### உசிலம்பட்டி

இங்குள்ள ஆர்.டி.ஓ. அலுவலகமுன்பு மின்சாரம், பஸ் போக்குவரத்து, விவசாயிகள்சங்கம் ஆகியவற்றைச்சார்ந்த 28 ஊழியர்கள் 16-ந் தேதி உண்ணுவிரதம் இருந்தனர். உண்ணுவிரதத்தை சிங்கராஜ் துவக்கி வைத்தும் யு, பி பல்ச்சமி முடித்துவைத்தும் பேசினர்.

### ஆண்டிப்பட்டி

இங்கு15ந்தேதி வி. நடராசன் தலைமையில் நடந்த உண்ணுவிரதத்தை மா. அண்ணாமலை துவக்கி வைத்தார் மாலையில் கோ. மணிவேல் முடித்து வைத்தார்.

16-ந் தேதி மா. அண்ணாமலை தலைமையில்12பேர் மேற்கொண்ட உண்ணுவிரதத்தை ஏ. பால்ராஜ் துவக்கி வைத்தார். வி. நடராசன முடித்தார்.

### போடியில் 3 நாட்களில் ரூ. 461 வசூல்

இங்குள்ள துணைப் பதிவாளர் அலுவலகம் முன்பு ஒலிபெருக்கி அமைக்கப்பட்ட பந்தலில் மூன்று நாட்களிலும் உண்ணுவிரதம் நடந்தது. இம்மூன்று நாட்களில் மட்டும் உண்டியல் மூலம் ரூ 461-50 வசூலானது.

முதல்நாள் எம் சிவனு தலைமையில் 22 தோழர்கள மேற்கொண்ட உண்ணுவிரதத்தை எஸ் நடராஜ்துவக்கி வைத்தும, ஏ அப்துலவஹாப் முடித்து வைத்தும் பேசினர் உண்டியல் மூலம் ரூ. 146 வசூலானது,

2-ம்நாள் நகர்மன்ற உறுப்பினர் எம் பாக்கியத்தம்மாள் தலைமையில் 19 பெண்கள் உண்ணுவிரதம் இருந்தனர். பிரமர் துவக்கிவைத்தும். கே ராமப்பனும், ஏ சிககந்தரும முடித்து வைத்தும் பேசினர். உண்டியலமூலம் ரூ 126 வசூலானது.

3ம்நாள் பல்வேறுதொழில்களில்பணிபுரியும் 37தோழர்கள் சு மல்லிகார்ச்சுனன் தலைமையில் உண்ணுவிரதம் மேற்கொண்டனர். எம் சிவனு துவக்கி வைத்தும், மாலையில எம் பாக்கியத்தமமாள், ஆர் கஸ்தூரி ராமர், பி உசேன்மீர், நரசிம்மன ஆகியோர் முடித்து வைத்தும் பேசினர். உண்டியல் மூலம ரூ 189-50 வசூலானது.

தேனியில் நடந்த விவசாயிகள் அணி உண்ணுவிரதத்துக்கு வி பொன்னையா தலைமை வகித்தார். மாலையில் ஏ லாசர் முடித்து வைத்தார்.

### விருதுநகரில்

இங்கு தேசபந்து மைதானத்தில் ஜான் மருதநாயகம், பழனிச்சாமி தலைமையில் 14 சி ஐ டி யூ ஊழியர்கள் உண்ணுவிரதம் இருந்தனர். மாலையில உண்ணுவிரதத்தை இந்திய மாணவர் சங்க மாநிலச் செயலாளர் சு பாலதண்டாயுதபாணி முடித்து வைத்தார்.

### கோவில்பட்டி

நெல்லை மாவட்டம் கோவில் பட்டியில், 16-ந் தேதியன்று மின்சாரம், பஞ்சாலை, வாலிபர் முன்னணி ஆகியவற்றைச் சார்ந்த 26 தோழர்கள் தியாகராஜன் தலைமையில் உண்ணுவிரதம் இருந்தனர்.

### மாதர் அணி

பயணிகள் விடுதி முன்பு 15-ந் தேதி நடந்த மாதர் அணி உண்ணுவிரதத்துக்கு மாதர் சங்க நிர்வாகக்குழு உறுப்பினர் பூ. முத்துலெட்சுமி தலைமை வகித்தார். சிறுமி முத்துலெட்சுமி உட்பட 8 பேர் பங்கு கொண்டனர்.

### உடன்குடியில் 85 வயது நிரம்பிய தோழர் தலைமையில்

இங்கு 13-ந்தேதி 5 பேர் பங்கேற்ற உண்ணுவிரதத்துக்கு 85 வயது நிரமபிய ரா. இலட்சுமண நாடார் தலைமை வகித்தார்.

மறுநாள் வாலிபர் முன்னணி சார்பில் 8 பேர் கலந்து கொண்ட உண்ணுவிரதத்துக்கு எஸ். மாசான மூத்து, கே. நடராஜன் தலைமைவகித்தனர்.

மூன்றும்நாள் பஞ்சாயத்து அலுவலம் முன்பு நடந்த மாதர் அணிஉண்ணுவிரதத்துக்கு எஸ் பி பால தங்கம தலைமை வகித்தார், 22 பெண்கள் பங்கேற்றனர்.

### கைக்குழந்தைகள் சிறுவர்-சிறுமியர்

பெ. பாக்கிய கௌரி என்ற 5 மாத கைக்குழந்தை மற்றும், மா. சுடலைமாடன் என்ற 9 மாத ஆண்குழந்தைகளுடன் தாய்மார்கள் கலந்து கொண்டனர்.

தவிர, 5 வயது ஜே, ஜோதிபாச. ப, சீனிவாசன் ஒரு வயது இ. முத்து 2 வயது செ. டிமிட்ரோ ஆகியோரும் உண்ணுவிரதத்தில் பங்கு கொண்டது பொதுமக்களின் கவனத்தை ஈர்த்தது.

அன்று மாலையில் நடந்த பொதுக்கூட்டத்தில் எஸ். பூவலிங்கம், மாசானமுத்து, சே. நடராஜன், பி. கணேசன், கிருஷ்ணன் பேசினர்.

### சங்கரன்கோவில்

சங்கரன் கோவிலில் தாசிலதார் அலுவலகம் முன்பு சுந்தரி தலைமையில 5 பேர் மேற்கொண்ட உண்ணுவிரதத்தை கே கந்தசாமி துவக்கி வைத்தார். முன்னதாக ஆர் எஸ் முப்பிடாதி தலைமையில் ஊர்வலம நடந்தது.

### மேட்டூர் அணை

மேட்டூர் ஆர்.எஸ்-ஸில் நடந்த உண்ணுவிரதத்தில் 11பெண்கள் கலந்துகொண்டனர். முன்னதாக இருநாட்களாக சுற்றுப் பகுதிகளில் ஆதரவு கோரி பிரச்சாரமும் செய்தனர்.

### கிள்ளை

சிதம்பரம் தாலுகா கிள்ளை பேரூராட்சி அலுவலகம முன்புநடந்த மாதர் உண்ணுவிரதத்தை விவசாயிகள் சங்க துணைத் தலைவர் என் சங்கரய்யா துவக்கி வைத்தார். லோகாமபாள்துரு மயில் தலைமையில் 18 பேர் கலந்து கொண்ட இந்த உண்ணுவிரதத்தை தோழர் டி. ராஜாராமன் முடித்து வைத்தார்.

---

## பழிவாங்கலை எதிர்த்து விருதுநகர் பஸ் தொழிலாளர் கிளர்ச்சி

விருதுநகர், மார்ச், 17—

இங்குள்ள எஸ் பி.டி. என்றசீனிவாசா மோட்டார் சர்வீஸ் தொழிலாளர்கள் அனைவரும் நிர்வாகத்தின்பழிவாங்கும் போக்கைக் கண்டித்தும் நியாயமான கோரிக்கைகளை ஏற்கமறுக்கும் அகம்பாவத்தைஎதிர்த்தும் ஒன்றுபட்ட போராட்டத்தில் இறங்கி வருகிறார்கள்.

டிரைவர் குருசாமி. கண்டக்டர் கோவிந்தசாமி இருவருக்கும் மீண்டும்சம்பளத்துடன்வேலை அளித்தல் சமபள உயர்வு பேட்டா உயர்வுமுதலிய 13 கோரிக்கைகளை தொழிலாளர்கள் முன்வைத்துள்ளனர்.

நேரடிப் பேச்சு வார்த்தைக்கு வர மறுத்தாலும், லேபர் அபீசர் விசாரணைகளுக்கு நிர்வாகமஆஜராகததாலும் வேலைநிறுத்த நோட்டீஸ் தரப்பட்டுள்ளது. 22-ந் தேதி முதல் வேலைநிறுத்தம் துவங்குகிறது.

### ஆர்ப்பாட்டம் உண்ணுவிரதம்

போராட்டத்தின் முதல் கட்டமாக 10, 11, 12 தேதிகளில் ஆர்ப்பாட்டமும்,17-ந் தேதிவிருதுநகர் பஸ்நிலையம் முன்பு தோழர்கள் குருசாமி, ஜனார்த்தனன் தலைமையில் 3 நாள் உண்ணுவிரதமும் நடந்தது. சிஐடியூ மாநிலக் குழு உறுப்பினர் தோழர் எஸ் ஏ பெருமாள் உண்ணுவிரதத்தைத் துவக்கி வைத்தார்.

---

## வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதியில்

# இலவச தையல் மிஷின் தருக

## தையற் தொழிலாளர் கிளர்ச்சி

சாத்தூர், மார்ச், 17—

வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள சாத்தூர், விருதுநகர், சிவகாசி ஸ்ரீ வில்லிபுத்தூர், அருப்புக்கோட்டை பகுதியிலும், பிற இடங்களிலும் உள்ள தையல் தொழிலாளர்களுக்கு இலவசமாக தையல் மெஷின்கள் வழங்க வேண்டும என்று கோரி இங்குள்ள தையற் தொழிலாளர்கள் தாசில்தார் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம நடத்தினர்.

### வேலைநிறுத்தம்

கடந்த 12ந் தேதியன்று தையற் தொழிலாளர் சங்கம் சார்பில கோரிக்கைதினமும ஆர்ப்பாட்டமும் நடந்தது. அன்று தையற் தொழிலாளர் அனைவரும் வேலைநிறுத்தம் செய்து தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தினர்.

ஆர்பாட்டத்துக்கு சங்க ஆலோசகர் சி செல்லச்சாமி,செயலாளர் கே பாண்டியன், குழந்தைசாமி,முத்துமணி, ஏ மணி, சேதுராம லிங்கம் ஆகியோர் தலைமை வகித்தனர்.

வீட்டடிமனை, நீண்ட கால தவணை அடிப்படையில் வீடுகட்டகடன், கட்டாய ரேசன், வறட்சி நிவாரணக் கடன், வயது முதிர்ந்து ஓய்வு பெற்ற தையல தொழிலாளர்க்கு முதியோர் உதவித் தொகை முதலிய கோரிக்கைகளையும் வற்புறுத்தும் கோரிக்கை மகஜர் தாசில்தாரிடம்அளிக்கப்பட்டது. முன்னதாக வடக்கு ரத வீதியிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது.

---

## தொழிற் சங்க ஊழியர் பேரவை

பழனி, மார்ச். 16—

பழனி வட்ட சி ஐ டி யூ தொழிற் சங்கங்களின் ஊழியர்கள் பேரவை கடந்த 9-ந் தேதி தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் தலைவர் சுடலைமுத்து தலைமையில் நடந்தது.

மின்சாரம், இரயில்வே பொதுப் பணித்துறை, பஞ்சாலை, பொதுத்தொழிலாளர் சங்க பிரதிநிதிகள் திரளானோர் கலந்து கொண்டனர்.

சி ஐ டி யூவின் மத்திய மாநிலக் குழுக்களின் முடிவுகளை தோழர் வி ஏ கருப்புசாமி, விளக்கிப் பேசினார்.

---

## வருந்துகிறோம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் குடியாத்த (வட ஆற்காடு) நகரக் கமிட்டி உறுப்பினரும், நகராட்சி மன்ற உறுப்பினருமான தோழர் கே வி கிருஷ்ணனின் தாயார் திருமதி சின்னம்மாள் கடந்த 3—3—74-ந் தேதி காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

மகாராஷ்டிரா

## கல்லூரி ஆசிரியர்கள் போராட்டம்

பம்பாய். மார்ச். 17—

பல்கலைகழக மானியக் கமிஷன் கோரிக்கைகளை மாநில அரசு அமுல்படுத்தும் வரை, வரவிருக்கும் தேர்வுகளை பகிஷ்கரிப்பது என்பது மகாராஷ்டிரமாநில பல்கலைகழக. கல்லூரி ஆசிரியர்கள் சம்மேளனம் மீண்டும் உறுதி செய்துள்ளது.

பம்பாய் பல்கலை கழக ஆசிரியர் சம்மேளன செயலாளர் தாக்கெடெத் என்பவர் கூறியதாவது:—

கோரிக்கைகள் நிறைவேறும் வரை தேர்வுகளை பகிஷ்கரிப்பது என்ற கோரிக்கைக்கு மகாராஷ்டிர மாநில முழுவதும இருக்கின்ற பல்கலைக் கழகங்களின ஆசிரியர்களிடம பெரும வரவேற்பு இருக்கிறது என்று குறிப்பிட்டார்.

போராட்டத்தை உறுதியாக நடத்திவிடுவது என்பதை ஆசிரியர்களுக்கு உறுதியளிக்கும் பொருட்டு மகாராஷ்டிர மாநில பல்கலை கழக கல்லூரி ஆசிரியர் சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டி கடந்த வெள்ளிக் கிழமை கூடி போராட்ட அறைகூவல் விடுத்துள்ளது,

மேலும், தனித்தனியாக ஆசிரியர் சங்கங்களை சந்தித்து பேசுவதன்மூலம், பல பல்கலைக்கழக ஆசிரியர் சங்கங்களை தனிமைப்படுத்த முயற்சிக்கும் அரசாங்கப் போக்கையும கண்டித்தனர்.

---

## விவசாயிகளுக்கு ஆதரவாக தொழிலாளர்கள்

தாராபுரம், மார்ச். 16—

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம் முன் வைத்துள்ள— வறட்சி நிவாரணம, கடன் வசூல் ஒத்திவைப்பு முதலிய 12 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி இங்குள்ள தாசில்தார் அலுவலகம் முன்பு சிஐடியூவில் இணைந்துள்ள தொழிலாளர்கள் ஆர்பபாட்டம நடத்தினர். கோரிக்கை மகஜரும தாசில்தாரிடம் அளிககப்பட்டது.

இதற்கு தோழர்கள் டி பி முத்துச்சாமி, பி நாச்சிமுத்து ஆகியோர் தலைமை வகித்தார்கள்.

---

## அடக்கு முறை எதிர்ப்பு தினம் மத்திய கமிட்டி தீர்மானம்

பீகார் இயக்கத்தின் ஓராண்டு நிறைவை மார்ச் 18-ந் தேதி கொண்டாடும் டி ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையிலான சத்ரசங்கரஷா சமிதி அழைப்பு விடுத்திருந்தது அல்லவா? அது பற்றி 7-ந் தேதி முதல் 13-ந் தேதி வரை கல்கத்தாவில் கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின், மத்தியக கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

மார்ச் 18-ல் பீகார் அசெம்பிளி முன்பு பெரும் பேரணியை திரட்டுமாறு சத்ரசங்கர்ஷாசமிதி விடுத்து அழைப்புக்கு மார்க்சிஸ்ட கட்சி தனது ஆதரவை அளிக்கிறது என்று அத்தீர்மானம் கூறுகிறது,

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் பீகார் மாநில ஜனவாதிசங்கராம் சமிதி விடுத்துள்ள அறைகூவலில் மார்ச் 18-ல் கறுப்பு பேஜ்கள் அணிந்து துப்பாக்கிச சூடுகள் நடந்த இடங்களில் ஸ்தலயாத்திரைகளை நடத்தியும் மார்ச். 17-ல் இரவில் தீவட்டி ஊர்வலங்களை நடத்துமாறும் இதே நடவடிக்கைகளை, மார்ச் 16-ல், கடந்த ஆண்டின் இதே நாளில மிருகத்தனமான துப்பாக்கி சூடு நடந்த பேட்டையாவில் நடத்துமாறும் மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையிலான பீகார் மாநில ஜனவாதிசங்கராம் சமதி அறைகூவல விடுத்திருந்தது இதற்கு மத்தியக்கமிட்டி தனது ஆதரவை தெரிவித்துள்ளது.

கடந்த ஓராண்டு பீகார் இயக்கத்தில 200பேர் சுட்டுக் கொல்லப்பட்டதையும் நூற்றுக்கணக்கில் படுகாயமடைந்ததையும், ஆயிரக்கணக்கானோரைகைதுசெய்ததையும, பல்வேறு அரசியல் கட்சித்தலைவர்கள், ஊழியர்கள கைது செய்யப்பட்டதையும் மத்தியக்கமிட்டி நினைவு கூர்கிறது.

பீகாரில் நடந்த இந்நிகழ்ச்சிகள் மேற்குவாங்கத்திலும், கேரளத்திலும், திரிபுராவிலும், ஆந்திராவிலும அவிழ்த்து விடப்பட்ட அடக்குமுறையின் தொடர்ச்சியே என்றும் மத்திய கமிட்டி சுட்டிக்காட்டியது.

காங்கிரசின் அடக்கு முறைகளுக்கு கண்டனம் தெரிவிக்கவும,பீகார் அசெம்பிளியை கலைக்கவும் அம் மாநில அரசை ராஜினாமா செய்யக்கோரியும் பீகார் மக்கள் பெருந்திரளாக மார் 18-ந் தேதிய பேரணி பந்தலினில் கலந்து கொள்ளுமாறும் மத்தியக்கமிட்டி அழைப்பு விடுத்தது,

---

## ஆசிரியருக்கு

## இ எஸ் ஐ லீவுக்கு அரைச் சம்பளம் இல்லையாம்

ஐயா,

உடல் நலமுற்று, இ எஸ் ஐ மருத்துவமனையின் சிபாரிசின் பேரில் லீவு கொடுக்கப்பட்டால், அத் தொழிலாளர்களுக்கு லீவு நாட்களுக்கு அரைச் சமபளம வழங்க வேண்டும் என்பது சட்ட விதியாகும்.

ஆனல் புதுக்கோட்டை மாவட்டம் காவேரி மில்லில் ஐந்து ரூபாய்தான கொடுக்கபடுகிறது.

உதாரணமாக ஸ்பின்னிங் டிபார்ட் மெண்டில் பணிபுரியும் ஒரு தொழிலாளிக்கு அரைச் சம்பளமாக ரூ 9.30 கிடைக்கவேண்டும. ஆனல் ரூ 5 மட்டும் தான் தரப்படுகிறது.

அதே சமயத்தில் இ எஸ் ஐ பிரிமீயமாக மாதாமாதம் ரூ 7 வீதம் பிடித்தம் மட்டும் செய்து விடுகிறார்கள்.

எனவே, தமிழக அரசும், சம்பந்தப்பட்ட இலாகாவும இ எஸ் ஐ லீவுகளுக்கு தொழிலாளிககு உண்மையான அரைச் சம்பளம்— ஒரு தொழிலாளியின் சம்பளத்தில் சரிபாதி கிடைக்க ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவண்,
டி. குருசாமி
காவேரி நகர்.

---

## கம்போடியாவில் கூலிப்படைகள் காலியாகின்றன

நாம்பென், மார்ச் 17—

கம்போடிய பொம்மை அரசின் கூலிப்படைகளை விரட்டியடித்து முன்னேறி வரும் தேசிய விடுதலை முன்னணிப்படைகள் நீக்லுயோங் என்னும் நகரத்தின விமானத்தளத்தை கைபபற்றியது. பொம்மை அரசுக்கு உதவிகரமாக இருந்த விமான போக்கு வரத்தை கைப்பற்றியது. மேலும், விமான நிலையத்தை பிடித்த விடுதலைப்படைகள் நகருக்குள் தெருச் சணடைகளை நடத்தி கூலிப்படைகளை விரட்டி வருகிறது.

அந்நகருக்குள் இருக்கும் பொம்மை அரசின ராணுவத் தளவாட கிடங்கிகள் மீது விடுதலைப்படைகள்தொடர்ச்சியாக குண்டு வீசி அழித்து வருகின்றன.

நாம்பென்னைச் சுற்றி கூலிப்படைகள பெருமளவில காத்து நிற்கின்றன. நாமபென்னுக்கு 3 மைல் தூரத்தில் உளள விமான நிலையத்தின் மீது விடுதலைப் படைகள் தாக்குதலை தொடர்ச்சியாக நடத்தி வருகின்றன.

இந்தப் பின்னணியில் சீனத்தலைநகர் பீகிங்கில ஜப்பான் — கம்போடிய நட்புக் கவுனசிலில் பேசிய விடுதலை முன்னணியின் தலைவர் சிஹானுக் இன்னும் இரண்டு மூனறு வாரங்களில் தலைநகர் நாமபென, விடுதலைப் படைகளால கைப்பற்றப் படும் என்று தெரிவிததார்.

மேலும் கம்போடியா தேசிய விடுதலைப்படைகள் பிடித்த பகுதிகளில் இது வரை அன்னியர்கள் யாரும் கைது செயயப்படவில்லை எனறும் அவர் குறிபபிடடார்.

மேலும் லான்லால் பொம்மை அரசு சக்திகளை இணைக்கும் எந்தவொரு கூட்டு சர்க்காரையும அமைக்க போவதில்லை என்றும் தெரிவிததார்.

(8ம் பத்தி பார்க்க)

2-ம் பத்தி தொடர்ச்சி

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.